சற்குருதுணை

# ஸ்ரீ குருதெரிசனமாலை





இஃது, சிக்கலைச்சேர்ந்த சங்கமங்கலம்—பழையனூரில்
ஸ்ரீ குரு ஞானபூபதிகளுக்காக அமைக்கப்பெற்ற
ஸ்ரீ சற்குரு மடாலயத்தின் (எட்டாவதுஆண்டு)
திருவாரூர் ஸ்ரீ குரு கருணையானந்த ஞானபூபதிகள்
செனனநாள் அன்னதான வைபவத்தின்போது
ஷெ சுவாமிகளின் சீடகோடிகளில் ஒருவராகிய
கருணை. சோமசுந்தர சுவாமிகளால்
துதிசெய்யப்பெற்றது.

கருணாநிதி கருணை முன்னிற்க.

# ஸ்ரீ குரு தரிசனமாலை.

---

தினகர னிலாவக்கினி யுலாவுவளி யைத்தினஞ்
சிறியசுழி முனைப்பின்வழியாய்ச்
சிறிதுசிறி தேற்றியே பிரமரந்த் ரம்புகச்
செய்துசித வெளிபினிறைய
எனகம்வெகு சூட்சாதி சூட்சங்க ளனுதின
மியம்பிவரு கிருபைநிதியே
பிரவுபக லேகுபதி விரவியறி வோடு[illegible]
லேகாந்த ஞானமுதலே
சனகருடன் மாதவ மிருந்தவொர் சனந்தனர்
சனாதரர் சனற்குமாரர்
தவமுனிவர் நால்வரு முணர்ந்திடப் பொருளோது
சற்குருவி னவதாரமே
கனகமனை சூழ்சங்க மங்கலம் பழையனூர்க்
கவினுறு மடாலயத்திற்
கண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே (1)

சிறுவயதின் மெய்ஞ்ஞான நிலைமைவந் துற்றதாற்
றிருஞான சம்பந்தனே!
தேங்கருணை வாய்ந்தகவி பாடுநிதி யானதாற்
றிருநாவி னுக்கரசனே!
மறுவறுந வின்பமுறு விழிநீ ருகுத்தலால்
வாதவூ ரடிகள்தானே!
மங்காது விட்டகுறை பூர்த்திசெய லான்முந்தை
வந்தசுந் தரமூர்த்தியோ!
நிறுவரு மகத்துறவு பூண்டொழுக லாலொற்றி
நிலவிவளர் வெண்காடனே!
நிதயோகு புரிதலாற் றூபுமா னவனே!
நிகழ்த்துவாய் நினதுவடிவைக்
கறுவன்முகில் தவழ்சங்க மங்கலம் பழையனூர்க்
கவினுறு மடாலயத்திற்
கண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே (2)

சொருபநா மேயெனக் கருதிவெகு திடமாய்த்
துணிந்தவர்க ளில்லறத்தைச்
சூழ்ந்துநீங் காதிருந் திடினுமற் றோரணுத்
துணைகுறை யவர்க்கில்லையவ்
வுருவநா மேயெனத் திடமுடன் றுணியாம
லுள்ளவர்க ளில்லறத்தை
யொருவிநீங் கிடினுமத னாலுள்ள தோமுக்தி
யுற்பவம தறுமோவெனக்
குருபரன் றவராசன் முதுகுன்றில் வாழுங்
குமாரதே வென்னுமுனிவன்
கூறிய விலக்கணங் குறையாம லில்லறங்
குலவிவளர் திடஞானியே
கருதுமாண் புறுசங்க மங்கலம் பழையனூர்க்
சவினுறு மடாலயத்திற்
சண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே (3)

பெற்றதாய் கர்ப்பத் தழுந்தியதை யெண்ணிலோ
பேசரு மகாவருத்தம்
பின்புமகி தோன்றவும் பால்யத்தி லறியாத
பேதமையி னால்வருத்தம்
இற்றதென வுணராம லெவ்வனப் பருவத்தி
லேந்திழையர் பெரும்வருத்தம்
இதன்மேலு மறிவகல் வயோதிகப் பருவத்தி
லெவ்வளவு பிணிவருத்தம்
மற்றுமேற் கூற்றுவன் பாசத் தொறுத்திடும்
வருத்தமெத் தனையிதெல்லாம்
வைத்திருக் குஞ்சடல மீடேற லெவ்விதமுன்
மலரடிப் பேறுதருவாய்
கற்றவர்க ணிறைசங்க மங்கலம் பழையனூர்க்
கவினுறு மடாலயத்திற்
கண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே (4)

அப்பர்மறை வானநாள் சித்திரைச் சதயமென்
றவனியெல் லாம்புகழுநீர்
அவதார மானநாள் சித்திரைச் சதயமீ
தார்க்குங் கிடைக்கவெளிதோ
இப்படியொர் மாதத்தொர் நட்சத் திரந்தன்னி
லெவர்மறைந் தெவருதித்தார்
ஏதே தபூருவ மபூருவ மிதைப்போலு
மினிமேவ ருதிப்பார்கொலோ
முப்பவன முந்தொழு மதீதமே தாந்தியே
மோனமெய்ஞ் ஞானவடிவே
முக்குணஞ் சகலகே வலதேச காலமற
முடிவாய் முடிந்தமுடிவே
கற்பவல கனசங்க மங்கலம் பழையனூர்க்
கவினுறு மடாலயத்திற்
கண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே (5)

என்னாறு நெடுங்கால மெத்தனை பவங்களை
யெடுத்தெடுத் தேங்கியிந்நா
ளீரிரண் டோடொன்று சேர்பகுத் தறிவுடைய
விம்மனித வடிவுபெற்றும்
மன்னவர் நடக்கையே யுண்மையென வெண்ணிநித
மாயாந்த காரவாழ்வில்
மனதைக் குழம்பவிட் டுதையுறு பஞ்சுபோல்
வாணாள் கழிந்திடாமல்
நின்னையமு தறிவித்து நிகழ்கரண பொறிவிடய்
நிக்ரகம் புரியும்யோக
நிட்டையை நிதம்பழகி யெட்டரிய பூரண
நிவாதவொளி யொன்றவருளாய்
கன்னகன் வயற்சங்க மங்கலம் பழையனூர்க்
கவினுறு மடாலயத்திற்
கண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே (6)

வெண்டாம ரைத்தவிசு மேவிய சதானந்தன்
மேதினி யெலாம்படைப்ப
வேலைதுயில் வோனின்று யாவையுங் காத்துவர
விழிமூன்று கொண்டருத்ரன்
றண்டா தகண்டமுங் நிக்ரகஞ் செய்திடச்
சந்த்ரசூ ரியரிருவருந்
தத்தநிலை கோடாது குணகுட நடந்திடச்
சதவேள்வி மன்னன்முதலாய்
வண்டாடு தொடைமருமம வெண்டிசைப் பாலகரும்
வாகுடன் காவல்புரிய
வாடாத கோலொச்சி மண்முதற் பகிரண்டம்
வரையரசு புரியுமரசே
கண்டார்கள் புகழ்சங்க மங்கலம் பழையனூர்க்
கவினுறு மடாலயத்திற்
கண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே (7)

பத்திக் கிரங்கிடுங் கருணையங் கடலென்று
படிபுமறை யும்புகழுநின்
பாதபூ சைப்பிரிய ரானவெங் கட்கெலாம்
பரமவுன் கருணைகூர்ந்து
முத்திக் குகந்தபல சூட்சங்கண் முழுவது
மொழிந்தருளி முந்தைவினைகண்
முற்றுங் கழித்துநிசி பகலற்று முடிவாய
மோனவெளி சாரவருளாய்
சுத்திக் குவாலெறியு மோதைபின் வெரீஇச்சுரு
தூய்வாளை தெங்குகமுகிற்
றுண்ணெனப் பாய்ந்திளங் காய்சிதற வம்புயச்
சுனைதொறுந் திரைகண்மோதிக்
கத்திக் குழறுசங்க மங்கலம் பழையனூர்க்
கவினுறு மடாலயத்திற்
கண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே (8)

பாராதி யாரூறு தத்துவா தீதமாய்ப்
பகலிரா வற்றபதியாய்ப்
பழையசதுர் வேதங்க ளன்றமுத லின்றுவரை
பார்த்துணர வரியபொருளாய்
ஊராதி யற்றுமேற் பேராதி யற்றதா
யுரைமனந் தாண்டிநின்ற
வுண்மைப் பரம்பொருளே யடியரேம் வாழவின்
றுதவிநின் றுண்டருளுவாய்
தீராத பிறவிதவிர் பரமசஞ் சீவியே
தேடுந் துவாதசாந்தச்
சிற்பர வெளிப்பசுங் கற்பக விருட்சமே
செல்வமே தெள்ளமுதமே
கார்ரார் பொழிற்சங்க மங்கலம் பழையனூர்க்
கவினுறு மடாலயத்திற்
கண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே (9)

நிகழுகலி நாலா யிரத்துத் தொளாயிர
நிலாவுமெண் பத்தெட்டினில்
நீடுத்த ராயணமுன் மேடத்தி னேழ்திகதி
நேடமர பக்கம்வந்த
திகழுமதி வாரத்தில் வருகுமே காதசித்
திதிசதய கடகராசி
தினமணி யெழுந்திரண் டென்கடிகை யெனிருகலை
சேரமைய மிவ்வுலகெலாம்
புகழுறவு மகிழுறவு மவதார மானசிவ
போதமா தவராசனே
புண்ணிய நிறைந்ததிரு வாரூரி னுந்துரிய
பூமியினும் வளருமரசே
ககனர்விழை யுஞ்சங்க மங்கலம் பழையனூர்க்
கவினுறு மடாலயத்திற்
கண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே! (10)

அடியவர்க ேடசோன் மயம்பெறச் சிந்திக்கும்
அமுதசங் கற்பம்வாழி!
அவ்வமுத சங்கற்பம் விளைபூமி யானநின்
னருளிதயம் வாழி! வாழி!!
விடியமுத யம்போன்ற அரியநிலை பெற்றவுன்
விமலவுரு வாழி! வாழி!!
வேதமுடி வைப்பெற நிரந்தரமு மலர்வாக்கு
மேன்மேலும் வாழி! வாழி!!
கொடியபொறி வசமுறநி னன்பர்க ளனைகதங்
குலவுதக நாதம்வாழி!
கோடிகதி ரன்னசெங் கனகசபை நடிபாத
கோகனதம் வாழி! வாழி!!
கடியவிழ் வனச்சங்க மங்கலம் பழையனூர்க்
கவினுறு மடாலயத்திற்
கண்கண்ட தெய்வமாய்த் தெரிசனந் தந்துவளர்
கருணையா னந்தகுருவே (11)

---



கருணாநிதி (பில்டிங்ஸ்) பிரஸ், விஜயபுரம்—திருவாரூர். 33 SK